வெளியீடு - கஉச

உ

திருச்சிற்றம்பலம்

# நால்வர் தாலாட்டு



க. சம்பந்தர் -
உ. அப்பர் -
௩. சுந்தரர் -
௪. மணிவாசகர்



THE SOUTH INDIA SAIVA SIDDHANTA
:: WORKS PUBLISHING SOCIETY, ::
TINNEVELLY, LTD.
TINNEVELLY May 1929 & MADRAS

Price As. 2.

கழக வெளியீடு - ௧௨௫

உ
திருச்சிற்றம்பலம்

---

# நால்வர் தாலாட்டு



நால்வர்:-

௧. சம்பந்தர் -
௨. அப்பர் -
௩. சுந்தரர் -
௪. மணிவாசகர்

▽

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி & சென்னை.
சுக்கில - வைகாசி

உ

திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்தப் பெருமான்

## வரலாறு



திருஞானசம்பந்தப் பெருமான் **சீகாழியிற்** பிறந்தவர். இவர் தந்தையார் பெயர் **சிவபாதவிருதயர்**; ஞானசம்பந்தர் மூன்றும் ஆண்டிலேயே அம்மையின் திருமுலைப்பா லுண்டு இறைவனால் ஆட்கொள்ளப் பெற்றார். அந்தப்பால் ஞானப்பாலாதலின், அவர் அன்று முதல் **ஞானசம்பந்தரானார்**. அன்று முதலே 'தோடுடைய செவியன்' என்பது முதலான தேவாரப் பதிகங்களை ஓதலுற்றார். இதனால் ஞானசம்பந்தர் பேர் எங்கும் பரவிற்று. எல்லாரும் அவர்க்குத் தொண்டரானார்கள்.

பின்பு அப்பெருமான் திருக்கோலக்காவை யடைந்து கடவுளிடத்தில் பொற்றாளம் பெற்றார். அதுவுமல்லாமல் அரத்துறையில் முத்துச்சிவிகையும், பட்டீச்சுரத்தில் முத்துப்பந்தரும், ஆவடுதுறையில் உலவாக்கிழியும், வீழிமிழலையிற் படிக்காசும் சிவபிரான் பால் அடைந்தார். இடையிற் பாச்சிலாச்சிராமத்தில் ஒருத்தியின் முயலகநோயைத் தீர்த்துத், திருமருகலில் மற்றொருத்தியின் கணவனை உயிர்பெற்றெழச் செய்தார்.

இதற்குள் **அப்பர் பெருமான்** நட்பும் இவர்க்குக் கிடைத்தது. ஒருகால் அவரோடு மறைக்காடு சென்று திருக்கோயிற் கதவைத் தேவாரம் பாடி அடைத்து அவ்விடத்தில் தங்கினர். அப்போது பாண்டி நாட்டு மாதேவியார் **மங்கையர்க் கரசியாரும்** அமைச்சர் **குலச்சிறையாரும்** சம்பந்தரை விரும்பி வரவழைத்தார்கள். சம்பந்தரும் உடனே பாண்டி நாட்டுக்குச் சென்று அங்குப் பரவியிருந்த **சமண்** மதத்தை முழுதுந் தொலைத்துச் சைவம் பரப்பிச் சீகாழியை யடைந்தனர். வழியில் திருக்கொள்ளம்பூதூரில் இவர் தேவாரம் ஓதி ஓடமோட்டினர். திருத்தெளிச்சேரியில் **புத்தரை** வென்றார். பின்னர்த் திருவோத்தூரில் ஆண்பனைகளைப் பெண்பனைகளாக்கித் திருமயிலையில் எலும்பைப் பெண்ணாய் எழுந்தருளச்செய்து மீண்டும் சீகாழி அடைந்திருந்தனர்.

முடிவில் **திருமணநல்லூரில்** திருமணஞ் செய்து கொண்டபோது, எல்லாரோடுந் திருவருளொளியிற் கலந்தனர்.

உ

திருச்சிற்றம்பலம்

# நால்வர் தாலாட்டு

## காப்பு.

மால்வணங்கிப் போற்று மழவிடையான் வண்புகழ்தேர்
நால்வருட் டாலாட்டு நானியம்ப—நூல்வழியிற்
சந்ததமுஞ் சிந்தைசெயுந் தண்டைபுனை செஞ்சரணக்
கந்தமத தந்திமுகன் காப்பு.

## திருஞானசம்பந்த சுவாமிகள்

கம்பந்தவா தமாயாக் காதல்கொளமணப்பேய்கள்
வெம்பந்தக்களைகணீங்க வியன்சைவப்பயிர்தழைக்க
நம்பந்தரங்கபத்தி நாடுவோர்க்கருளுஞான
சம்பந்தப்பிள்ளையார்தஞ் சரணிதமுடிமேற்கொள்வாம்.

ஆராரோ - ஆராரோ
ஆராரோ - ஆராரோ

மஞ்சுறங்குநீள்புரிசை மாகாணிக்கவுணியர்தம்
மிஞ்சுகுலசிவபாத விருதயர்தங்கண்மணியோ.

ஆயிலழையார்பல்லோருள் அன்புநிறைநாயகமாம்
தாயெனவேபகவதியார் தமைக்கொண்டவிண்மணியோ
மேலாஞ்சிவபாத விருதயர்நீராடுகையில்
நாலாரணந்துதிக்கு நாயகிபாலுண்டவனே. ரு
உண்டவமுதுகண் டுட்டினவாரார்கொலெனப்
பண்டையொளியைச்சுட்டிப் பன்னுந்தவமுதலோ. சா
வேதங்கடந்தவனே விண்ணோர்களேத்துதமிழ்
வேதந்தனிலே விளக்கவந்தமெய்ப்பேறே. ௭
கொல்லோமோர்சிற்றுயிருங் கொல்வமடியாரையென்றும்
வெல்வோமென்றெண்ணமணர் வேர்களையுங்கோளரி
ஈற்றாமரைக்கரத்தில் நம்பனருளாலிரண்டு [யோ
பொற்றாளம்பெற்றவன்றன் புகழ்பாடும் புண்ணியனே.
எண்டிசையும்புகழ்ந்தேத்து மெழில்விளங்குமோர்தரளத்
தண்டிசையிற்றானமர்ந்து தமிழோதுதற்பரனே. அ
அன்புவளர்மாமயிலை யணிவணிகர்குலமாதி
னென்புவளர்பெண்ணுருவா யியங்கவருளல்கினனே.
மறைநான்கும்பூசித்த மறைக்காட்டிற்கதவுதமிழ்
மறைப்பாடியடைப்பித்த மறைஞானக்கண்மணியோ.
இப்படியிற்கூன்மாற னெய்துசுரவெப்புமவ
வெப்புமொழித்தருள்காழி வீரகனெனும்விஞ்சையனே.
அருஞானமாருயிர்கட் களிக்கவுலகினிலுதித்துத்
திருஞானசம்பந்தச் சீர்பேர்கொள்சின்மயனே. ௰உ

திருஞானசம்பந்த சுவாமிகள் தாலாட்டு
முற்றிற்று.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### வரலாறு



**திருவாமூரிலே** வேளாளர் குலத்திலே **புகழனார்** என்பவர் ஒருவர் இருந்தார். அவர்க்குத் **திலகவதியா** ரென்னும் ஒரு பெண்மகவும் **மருணீக்கியா** ரென்னும் ஓராண்மகவும் இருவர் பிறந்தனர். மருணீக்கியார் இளைஞரானதும் ஏதோ முன் வினைப்பயனாற் சமண்மதத்திற் புகுந்தார். புகுந்து அவர்கட்குத் தலைவராகித் **தரும சேன** ரென்னும் பட்டமும் பெற்றார். ஆனால் திலகவதியார் வேண்டுகோளுக்கு இணங்கித் திருவதிகைச் சிவ பெருமான் அவருக்குச் சூலைநோய் கொடுத்துச் சைவத்

துக்குத் திருப்பினர். அப்போது அவர் முதன் முதற் பாடிய தேவாரம் 'கூற்ருயினவாறு' என்னுந் திருப் பதிகமாம். அப்பதிகம் நாக்கு வல்லமை மிகவும் பெற் றிருந்தமையால் இறைவனே அவருக்கு **நாவுக்கரசு** என் னும் பெயர் கொடுத்தார்.

சமண்மதத்தவர்கள் இதைக் கண்டு பொருமை யுற் ருர்கள். அதனல் அவர்கள் தம் அரசனுதவியால் நாவுக் கரசரை நீற்றறையிலிட்டும், யானையை ஏவியும், நஞ்சை யுண்பித்தும், கடலிற்றள்ளியும் பலவாறு துன்புறுத்தி ஞர்கள். ஆனல் அரசுகள் திருவருளுதவியால் அவற்றை யெல்லாம் வென்றனர். முடிவில் அவ்வரசனும் சைவத் திற் சேர்ந்துவிட்டான்.

அதன் பிறகு நாவுக்கரசர் தூங்கானை மாடஞ் சென்று இடபக்குறி சூலக்குறி பெற்றும், நல்லூரில் திருவடியூறு உற்றும், திங்களூரில் **அப்பூதியடிகள்** திரு மகனை உயிரெழுப்பியும், வீழிமிழலையிற் படிக்காசு பெற் றும் இப்படிப் பல அருட்செயல்கள் செய்வாரானர்கள். ஞானசம்பந்தப் பெருமான் நட்பைப் பெற்று அவ ரால் '**அப்பரே**' யென்று அழைக்கலுற்ருர். திரு மறைக்காட்டில் மறைக்கதவைத் திறந்ததும், திருவை யாற்றிற் கயிலைக்காட்சி கண்டதும் அவர் அருட்செயல் களை விளக்குவனவாம்.

இறுதியில் **திருப்புகலூரில்** அரம்பையராலும் பொன்மணிகளாலும் சோதிக்கப்பட்டு எவற்ருலும் நெஞ்சம் கலங்காராய், 'எண்ணுகே' னென்னுந் திருப் பதிகமோதி இறைவனெளியிற் கலந்தனர்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

அப்பராவணியும்வேணி யரனடியகத்துளேதோ
யப்பராவிப்பணிந்தைந் தெழுத்தினலலையைநீந்தி
யப்பராவமுதமேய்ப்ப வருளுருவானவெங்க
ளப்பராஞானமூர்த்தி யடிகளையகத்துள்வைப்பாம்.

அன்றுமறைபூசித்தே யடைத்தகதவுந்திறக்கத்
துன்றுசுவைத்தமிழ்மறையைச் சொன்னவருட்கடலோ

ஆவலொடுசீர்காழி யண்ணல்சிவிகைசுமந்தே
யேவலரைவினவ ஈங்குற்றேனென்றவனே. உ

இன்பருளும்பைஞ்ஞீலி யெழிற்பதியிற்கட்டமுத
மன்பர்களுக்கருளரனு லடைந்தபரமாற்புதனே. ௩

ஈனமிலாவரமாத ரெழிலாகுமிருளையருண்
ஞானவொளிபால்வென்று நாதனருள்பெற்றவனே. ௪

உண்மாசுகழிப்பதர னெண்கைவிரதமெனக்
கண்மாசுபடுமவுனக் கழுதுகட்குத்தெரித்தவனே. ௫

ஊனதனிலொளித்துறையு மொருவனையேயுள்கிவிடம்
வானமிர்தமெனமகிழ்ந்து வாய்மடுத்துண்டிருந்தவனே.

எண்ணரியசமணர்கட லிட்டகற்றூண்மிதந்திடவெண்
சுண்ணவறைதடமாகச் சுகமுற்றுமீண்டவனே. ௭

ஏதமுறுமமணர்களா லேவியவெங்கரியதனை
நாதனருட்பண்பாடி நாணவைத்தநாயகமோ. ௮

ஐயனெனத்துதிசெய் யப்பூதிசேயைமுனம்
வையமிசைவரவழைத்த வான்புகழுநற்றவனே. ௬௦

ஒண்ணகைசேர்திலதவதி யுடன்றோன்றிச்சூலைகெடப்
பண்ணிற்"கூற்றாயினவா" பாடுசிவபாக்கியனே. ௰

ஓங்கலிலாவமண்சமயத் துட்கிடையையறிவிப்பான்
றீங்கில்மருணீக்கியராந் திருநாமம்பெற்றவனே. ௰௧

ஔவியமில்திருநாவுக் கரசரெனுநாமத்தைச்
செவ்விதாய்த்துதிசெய்யிற் சித்தியெலாந்தருவானே. ௰௨

திருநாவுக்கரசு சுவாமிகள் தாலாட்டு

முற்றிற்று.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்
## வரலாறு



**சடையனு** ரென்னும் ஆதிசைவர்க்குத் திருநாவலூ ரிற் பிறந்தவர் **சுந்தரமூர்த்திகள்.** இவர்க்குப் பிள்ளைப் பெயர் 'நம்பியாரூர' ரென்பது. திருப்புத்தூரில் இவர்க்கு மிகச் சிறப்பாய்த் திருமணம் நடக்கும்போது இறைவன் கிழவர் வடிவாய் வந்து நம்பியாரூரரின் பாட்டனர் கொடுத்ததாக ஓர் ஓலையைக் காட்டி அத் திருமணத்தைத் தடுத்தாண்டார். அன்றே நம்பியாரூரர் இறைவனுக்கு அடிமையாகித் திருவெண்ணெய்நல்லூர்க் குச் சென்று 'பித்தா பிறைசூடி' யென்னுந் தேவாரத் தால் இறைவனை வழுத்தினர். இறைவனைப் 'பித்தா' என்றமையால் '**வன்றொண்ட**' ரென்னும் பெயரும் இவர்க்கு உண்டாயிற்று. அதன்மேல் இறைவன் கட்

டளைப்படி திருவாரூருக்குச் சென்று **'பரவையா'** ரென்னும் மாதரசியை மணஞ்செய்து கொண்டு சுந்தரராய் விளங்கி அங்குத் தங்கினர். அங்குச் **சேரமான் பெருமாள்** நட்பு இவர்க்குண்டாயிற்று.

பின்பு திருவொற்றியூரை யடைந்து அங்குச் **சங்கிலியா** ரென்னும் பெண்மணியை 'என்றும் பிரிவதில்லை' யென்று ஆணையிட்டு மணந்துகொண்டனர். ஆனற் சில நாட்களில் அவ்வாணையை மீறித் திருவாரூரை நினைந்து புறப்படவே, இவர்க்கு இருகண்ணும் மறைந்தன. அப்படியே திருவெண்பாக்கம் வந்து ஊன்றுகோலும், கச்சிக்கு வந்து இடது கண்ணும், ஆரூருக்கு வந்து வலது கண்ணும் பெற்று ஆண்டவனை வணங்கினர். இதற்குள் பரவையார்க்கு ஊடல் வந்துவிட்டது. ஆகவே சிவபிரானைத் தூதுவிட்டுச் சுந்தரர் அவர் ஊடலைத் தீர்க்கவேண்டியதாயிற்று. இதனல் **ஏயர்கோன்** சுந்தரரைப் பகைக்கவே, திருவருளால் சுந்தரர் அவர் பகையையுந் தீர்த்துக்கொண்டார். தம்பிரானைத் தூதுவிட்டமையால் சுந்தரர்க்குத் **தம்பிரான்தோழ** ரென்னும் பெயரும் உண்டு. சுந்தரர் திருமுதுகுன்றம் முதலிய பல இடங்களிற் பொன்பெற்றமையும், திருப்புக்கொளியூ ரவிநாசியில் முதலையுண்ட பிள்ளையை எழுப்பினமையும் இவர் பெருமையை விளக்குவனவாம்.

கடைசியில் மலைநாட்டுத் **திருவஞ்சைக் களத்தில்** சுந்தரமூர்த்திகள் வெள்ளையானைமே **லேறிக்** கயிலை சென்றருளினர்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

கந்தரக்கறையுளான்றன் கருணையாற்கராமுன்னுண்டே
அந்தரஞ்சென்றமைந்த னுருயிரழைத்துநல்கித்
தந்தரத்தமிழ்கள்பாடித் தலைமைபெற்றுயர்ந்தஞானச்
சுந்தரமூர்த்தியார்தன் றணையடிதுதித்துவாழ்வாம்.

அரனடிக்கணன்புற்றோ ரனைவர்களுஞ்சீர்தூக்குந்
திரமுடையவிசைஞானி செய்தவமாய்வந்தவனே. க

அன்புடனேபுச்சியைமோந் தணைத்துகந்தெனப்பாவென்
றின்புடையசடையனு ரேத்தவந்தவெழின்மணியோ. உ

அய்பரடிப்பெருமையினு லருளுருவமாய்வந்த
துய்யசடங்கவிமகடான் துணைவியெனவந்தவனே. ௩

அறியவொணுவமலருமே யம்மணத்தில்வந்துமுன்னுண்
முறியோலைகாட்டவவர் முற்போரைத்தொடுத்தவனே.

அகிலமதிலந்தணர்க ளந்தணர்க்காளாதலெந்த
விகிதத்துமொவ்வாதோய் விப்பரனேயென்றவனே. ஞ

அவனியிலில்லாவார்த்தை யறைந்தனையே'பித்தா'வென்
றவனுறையும்வெண்ணெய்நல்லூர்க் கருட்பதிகஞ்
சொன்னவனே. சு

அரனளித்தவரும்பொருள்க ளனைத்தையுமாற்றிட்டுநன்
பரவியதோர்தடத்தெடுத்த பாக்கியசிகாமணியோ. [னீர்

அங்கையில்மான்மழுவேந்து மரன்றனையேபரவை
[பெனும்
மங்கைபாற்றூதனுப்பும் மாண்பறிந்தமன்னவனே. அ

அங்கமோராறுநுவ லங்கணனைப்பாடிமண்ணுஞ்
செங்கறனைப்பொன்னாகச் செய்யவல்லதிண்ணியனே.

அருமறைசொல்குண்டையூ ரானருளுமரிகுற்றப்
பெருமைமிகுபூதகணம் பெற்றவருட்பெருந்தகையோ.

அம்புவியாள்சேரனும்வெள் ளானைமீதூர்ந்துவரத்
தும்புருநாரதர்போற்றித் தொழுங்கயிலைகண்டவனே.

அண்டர்களேத்தித் துதியைந் தக்கரத்தானன்பொடுவன்
றொண்டனெனச்சொன்னதொடு சுந்தரப்பேர்பூண்ட
வனே. கஉ

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் தாலாட்டு
முற்றிற்று.

## மாணிக்கவாசக சுவாமிகள் வரலாறு



பாண்டி நாட்டுத் திருவாதவூரில் மாணிக்கவாசகர் இருந்தார். இளமையிலேயே பாண்டிய மன்னன் இவரைத் தனக்கு அமைச்சராக்கிக்கொண்டான்.

ஒருநாள் பாண்டியனுக்குக் குதிரை வாங்குவதற்காக நிறையப் பணமெடுத்துக் கொண்டு திருப்பெருந்துறைப் பக்கமாகச் சென்றார். அங்கு இறைவன் குருந்த மரநிழலில் அவரை ஆட்கொள்ளுவதற்காகவே வந்து தங்கியிருந்தார். மாணிக்கவாசகர் அவரைக் கண்டதும் அடிமையாகி நெஞ்சுருகித் திருவாசகம் பாடத்தொடங்கினார். இவர் பாட்டுக்கள் மாணிக்கம்போல இருந்தமையால், இவர்க்கு மாணிக்கவாசக ரென்னும் பெயர்

உண்டாயிற்று. குதிரைக்கு எடுத்துக்கொண்டுபோன பணமெல்லாம் அங்கு அடியார்களுக்குச் செலவழிந்து விட்டமையால், முடிவில் நம் பெருமான் அப் பாண்டிய னுக்குத் திருவருளுதவியால் நரிகளைப் பரிகளாக்கிக் காட்டி ஒரு திருவிளையாடல் புரிந்தார். வைகையில் வெள்ளம் பெருக்கிப் பாண்டியனைத் திருத்தியதும் இவர் அருட்செயலே யாகும். அப்புறம் மாணிக்கவாச கர் இறைவன் கட்டளைப்படி பல திருக்கோயில்களைக் கண்டு வணங்கிக்கொண்டு வந்து **தில்லை**யை யடைந்து சோழ அரசன் முன்னிலையில் ஊமைப்பெண்ணைப் பேசும்படி செய்து **புத்தரை** வென்றார். வென்று அவ் விடத்திலேயே தவஞ்செய்துகொண் டிருந்தபோது, இறைவனே அவர்பால் எழுந்தருளிவந்து **திருவாசக** மும் **திருக்கோவையா** ரொன்றும் வேண்டுமென்று கேட் டனர். திருவாதவூரடிகள் அவர் வேண்டுகோளுக் கிணங் கிச் சொல்ல, இறைவனும் அவற்றை எழுதிக்கொண்டு போய்த் திருச்சிற்றம்பல அறையில் வைத்து மறைந்த னர். அதில் ‘திருவாதவூரன் சொல்லப் பொன்னம்பல வன் எழுதியது’ என் றெழுதியிருந்தது.

இதைக் கண்ட தில்லைச் சைவர்கள் மிகவும் மகிழ்ந்து அடிகளிடம் வந்து வணங்கி அவற்றின் கருத்தைக் கேட்டனர். அவரும் அவரெல்லாரோ டுங் திருக்கோயிலுக்கு வந்து ‘அவற்றின் கருத்து இவரே’ யென்று பொன்னம்பலவரைக் காட்டி அங் குத் திடீரென்று எழுந்த திருவருளொளியிற் கலந்தரு ளினர்.

## ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

பாணித்தலின்றிவெள்வேற் பாண்டியனளித்தபொன்னால்
வேணிக்கண்வேணிவைத்த விமலனற்புதவதீத
ஆணிகனகமன்றூடு மையர்மந்திரமமைத்த
மாணிக்கவாசகக்கோன் மலரடிசென்னிவைப்பாம்.

கண்மணியினொளிபோலிக் கடவுலகெலாங்களிப்ப
விண்மணியாகியஞான விழியளிக்கும்வித்தகனே க

கானநவில்குருந்தடிக்கீழ்க் கண்ணுதல்மெய்ச்சிவஞான
மோனமாம்பரம்பொருள்சீர் மொழியப்பெற்றுய்ந்த
வனே. உ

கிள்ளைகள்பண்செய்மதுரைக் கீர்த்திமிக்கபாண்டியனால்
வெள்ளைமதிச்சடையனடி மேவச்செய்வித்தகனே. ங

கீதமிகுமெழில்மதுரைக் கேடிலாக்கோமாற்காய்
ஏதமிலாநரிபரியா யிசையவருள்பெற்றவனே. ச

குற்றமிகும்பவுத்தர்கண்முன் கொற்றவன்றன்மூகைப்
உற்றானூர்சீர்பாட வுவந்தருளுமருந்தவனே. [பெண் ரு

கூறரியசைவத்தின் கோட்பாட்டைநிந்திக்கு
மாறறிந்தபுத்தர்களை வாதில்வென்றவண்மையனே. சு

கெடுதலிலாவருளரனூர் கிருபையுடனேடெழுதப்
படுகலஞ்சேர்திருக்கோவை பாடியசற்பாத்திரனே. எ

கேள்விமிகுமறிஞர்களால் கிளர்நான்குமறையோதி
வேள்விசெயுமந்தணரால் வியந்துதொழுமேலவனே. ௮

கையிலாமலகமெனக் கற்றவர்கள்களிகூரப்
பொய்யிலாமறைதமிழில் புகன்றபெரும்புங்கவனே. ௯

கொண்டலெனவுயிர்கள்களி கொள்ளவுயர்ஞானநெறி
மண்டலத்திற்றெளிந்துயச்சீர் வாசகத்தைப்பொழிந்த
வனே. ௰

கோதிறிருவாதவூர்க் கோனெனுநாமத்தொடுமை
மாதிறைவன்பாதத்தை மறவாதமாமணியே. ௰௧

கௌவைபுரிபுத்தர்மதங் களைந்திதழியொண்பிறையான்
எவ்வமில்சீர்நிலைநிறுத்து மிணையிலாவாசகனே. ௰௨

ஸ்ரீ மாணிக்கவாசகர் தாலாட்டு
முற்றிற்று.

நால்வர் தாலாட்டு
முற்றும்.

# மூவர் தேவாரம் [பண் முறை]

வெளிவந்துவிட்டது.

சைவத் திருமுறைகளில் மிகுந்த ஆராய்ச்சியுடையவரும், 'அகத்தியர் தேவாரத்திரட்டு' விரிவுரையாசிரியருமாகிய

**திரு. க. சதாசிவ செட்டியாரவர்கள் பி. ஏ.**

பார்வையிடப் பெற்றது.

மூவர் தேவாரமும் 3 தனிப் புத்தகமாக வெளியிடப்பட் டிருக்கின்றன. ஒவ்வொரு தேவாரத்திற்கும் பதிகவரலாறு, பதிக அட்டவணை, தல அட்டவணை, பாட்டு முதற்குறிப்பகராதி, அருஞ் சொற்பொருள்விளக்க அகராதி முதலியன சேர்க்கப்பெற் றிருக்கின்றன. ஆசிரியர் படமும், அற்புதப் படங்களும் அழகியவாக அச்சிடப்பட்டு இணைக்கப்பெற் றிருக்கின்றன. பண்ணிற்கேற்பப் பாட்டுகள் சீர் பிரிக்கப்பெற் றிருக்கின்றன.

**திருஞானசம்பந்தர் தேவாரம் (திருமுறை 1-3)**

கலிக்கா 7 8 ரெக்சைன் or பட்டு 8 0

**அப்பர்சுவாமிகள் தேவாரம் (திருமுறை 4-6)**

கலிக்கா 6 8 ரெக்சைன் or பட்டு 7 0

**சுந்தரமூர்த்திசுவாமிகள் தேவாரம் (திருமுறை 7)**

கலிக்கா 3 0 ரெக்சைன் or பட்டு 3 8

**மூவர்தேவாரமும் மொத்தவிலை**

கலிக்கா 15 0 ரெக்சைன் or பட்டு 16 8

குறிப்பு:—சுந்தரர் தேவாரத்தில் இணைக்கப்படுவதாய்த் தெரிவித்த தேவார ஆராய்ச்சியுரையைத் தனி நூலாக அச்சிட்டு வெளிப்படுத்தத் தீர்மானித்திருப்பதால் முன்னரே பன்னிரு திருமுறைகட்கும் முன்பணம் கொடுத்தவர்கட்கு அது வெளிவந்தபின் அனுப்பப்படும்.

இரண்டாம் பதிப்பு வெளிவந்துவிட்டது.

# அகத்தியர் தேவாரத்திரட்டு

## [மூலமும் - உரையும்]

உரையாசிரியர்:-

திருமுறையாராய்ச்சியில் வல்ல

### திரு. க. சதாசிவ செட்டியாரவர்கள் பி. ஏ.

இதன்கண் அகத்தியர் சிவாலய முனிவர்க்கு மூவர் தேவாரத்தினின்றும் திரட்டிக் கொடுத்த 25 பதிகங்கட்கும் பதவுரை விளக்கவுரை எழுதப் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு பாட்டின் உட்கருத்தும் அதன்கண் கூறப்பட்டிருக்கும் புராண கதைகளும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. இவ்வுரை நூலைப் பழுதறக் கற்பவர் தேவார திருவாசகங்கட்குத் தாமே உரைகாணும் திறத்தினைப் பெறுவர் என்பது திண்ணம். மூவர் வரலாறுகளும் மூவர் திருவுருவப்படமும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன.

அழகிய கலிக்கா கட்டிடம் பொன் கிலிட்டுடன்

குறைந்த விலை ரூ. 1 12

---

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
6, பவளக்காரத் தெரு, சென்னை.

## பிள்ளைத்தமிழ்க் கொத்து (முதற்பாகம்)

இதில் அடங்கியவை: 1. விநாயகர் பிள்ளைத் தமிழ் 2 அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் உரையுடன் 3. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் உரையுடன் 4. அறம் வளர்த்த நாயகி பிள்ளைத்தமிழ் குலசையுலாவுடன் 5. பெருங்கருணை யம்மை பிள்ளைத்தமிழ் குறிப்புரையுடன் 6. சேக்கிழார் பிள்ளைத்தமிழ் உரையுடன்.

அழகிய அழுத்தமான கலிக்கா கட்டிடமுடையது
விலை ரூ 3 0

## மாதவச் சிவஞான சுவாமிகள் பிரபந்தத்திரட்டு

### முதற்பாகம் (செய்யுள்) வெளிவந்து விட்டது

இதன்கண் அடங்கியவை 1. அரதத்த சிவாசாரியர் சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பு அகவல், 2. சிவதத்துவ விவேகம் உரையுடன் 3. திருத்தொண்டர்திருநாமக் கோவை, 4. பஞ்சாக்கர தேசிகர் மாலை 5. சோமேசர் முதுமொழி வெண்பா 6. குளத்தூர்ப் பதிற்றுப்பத் தந்தாதி, 7. இளசைப் பதிற்றுப்பத் தந்தாதி 8. கலசைப் பதிற்றுப்பத் தந்தாதி 9. திருவேகம்ப ரந்தாதி 10. வட திருதில்லைவாயி லந்தாதி 11. செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ் 12. அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் உரையுடன் 13. கச்சி ஆனந்த ருத்திரேசர் பதிகம் 14. செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம் 15. திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு என்பன. ஆசிரியர் வரலாறும் திருவுருவப்படமும் சேர்க்கப் பெற்றுள்ளன. கலிக்காக் கட்டிடம். ரூ. 2 4

ஷை 2-ம் பாகம் (வசன நூல்கள்) ரூ. 1 12

---

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்,
6 பவளக்காரத் தெரு, சென்னை.